தனாலறந்தீண்டப்பெற்றதனாற்பொருளங்கையாலள்ளிக், கொண்
டதனாலின்பநலங்குடைந்ததனாற்பேரின்பங்கொடுக்குமன்றே. (௩௨)

மேற்படி வேறு.

முன்னவனருளிச்செய்தகாரணமுறையாலன்றி
யின்னமிப்புனிதவாவிக்கேதுவாலெய்துநாம
மின்னவிர்சடையான்சென்னிமேவியகங்கைநீரிற்
பின்னதுகலந்தநீராற்பெறுஞ்சிவகங்கையென்றும். (௩௩)

அலகிலாத்தீர்த்தந்தம்முளதிகவுத்தமமாய்த்தோன்றி
யிலகலாலிதனைத்தீர்த்தவுத்தமமென்பராய்ந்தோர்
பலவிதழ்விரித்துச்செம்பொற்பங்கயமலர்ந்தநீரா
லுலகவர்யாரும்பொற்றாமரையெனவுரைப்பரன்றே. (௩௪)

தருமமுன்னான்குநல்குதலாற்றருமதீர்த்த
மருமைசாலருத்ததீர்த்தமரும்பெறற்காமதீர்த்த
மிருமைசேர்முத்திதீர்த்தமெனப்படுமினையதீர்த்தம்
வெருவருபாவமென்னும்விறகினுக்கெரியாமன்றே. (௩௫)

இவ்வருந்தலத்தினன்றபெருமையுமெரிகாற்செம்பொற்
றெய்வதபதுமதீர்த்தப்பெருமையுஞ்செப்பக்கேட்டோ
ரெவ்வமில்போகம்வீடுபெறுவரென்றிசைத்தான்முந்நீர்ப்
பௌவமுண்டமரர்வேந்தன்பரியவம்விழுந்தீர்த்தோன். (௩௬)

தீர்த்தவிசேடப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௬௬.

---

## மூர்த்திவிசேடப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆலவாயலர்ந்தசெம்பொனம்புயப்பெருந்தீர்த்தத்தின
மேலவாம்பெருமைதன்னைவிளம்புவாரெவரேயங்க
ணீலமாமிடற்றுமுக்கணிராமயனறிவானந்த
மூலமாலிங்கமேன்மைமுறையினலறையலுற்றாம். (௧)

பொன்னெடுமேருவெள்ளிப்பொருப்புமந்தரங்கேதாரம்
வன்னெடும்புரிசைசூழ்ந்தவாரணவாசியாதிப்
பன்னருந்தலங்கடம்மிற்பராபரலிங்கந்தோன்று
முன்னரிக்கடம்பின்மாடேமுளைத்ததிச்சைவலிங்கம். (௨)

(௩௬) பரியவம்-தோல்வி.

அப்பதியிலிங்கமெல்லாமருட்குறியிதனிற்பின்பு
கப்புவிட்டெழுந்தவிந்தக்காரணமிரண்டினோடு
மொப்பரிதானஞானவொளிதிரண்டன்னவிந்தத்
திப்பியவிலிங்கமூலலிங்கமாய்ச்சிறக்குமன்றே (௩)

இந்தமாலிங்கந்தன்னைத்திலகக்கண்ணிசைமேனி
யந்தமிலழகன்பாகத்துமையொடுமெழுகுசெய்து
சந்ததம்விளக்கஞ்செய்யுந்தகைமையைநோக்கிச்சோம
சுந்தரனென்றுநாமஞ்சாற்றினார்துறக்கவாணர் (௪)

திறப்படுமூலலிங்கம்வியாபியாய்ச்சிறந்ததிற்கு
மறப்பெருங்கடவுள்சோமசுந்தரனதனாலன்றே
கறைக்கதிர்வடிவேற்றென்னன்கையிற்பொற்பிரம்புபட்ட
புறத்தடித்தழும்புமூன்றுபுவனமும்பட்டதன்றே. (௫)

சொற்றவிச்சமட்டியானசோமசுந்தரனைக்காணப்
பெற்றவர்வியட்டியானபிறபதியிலிங்கங்காண
லுற்றவராவரென்னென்றுரைக்கினவேறூட்டுநீர்போய
மற்றையசினைகளெல்லாந்தழைவிக்குமரத்தினமாதோ. (௬)

எத்தலத்தியாவனெண்ணெண்டிருவிளையாடல்செய்தா
னத்தலத்தவனுக்கொப்புமதிகமாஞ்சிறப்பும்பெற்ற
வுத்தமமென்றுமெந்தவுலகினுமில்லையந்த
வித்தகனதிகத்தன்மையினைத்தெனின்விளம்பக்கேண்மின். (௭)

பொருப்பினுட்டலைமையெய்தும்பொன்னெடுங்குடுமிமேரு
தருக்களிற்றலைமைசாருந்தண்ணறுந்தெய்வதாரு
விருப்புறுவேள்வித்தம்முண்மேம்படும்பரிமேத
மருட்படுதானந்தம்முள்விழுமிதாமன்னதானம். (௮)

மணிதரியுயர்ந்தோராதிமறையவர்தேவர்தம்மிற்
பணிதருதிங்கள்வேணிப்பகவனேயுயர்ந்தோன்வேட்டோர்க்
இனிதருள்விரதந்தம்முளதிகமாமிந்துவாரம்
புனிதமந்திரங்கடம்முட்போதவைந்தெழுத்துமேலாம். (௯)

மின்மைசான்மணியிற்சிந்தாமணிவரம்விழுப்பநல்குந்
தன்மைசாலறங்கடம்மின்மிகுஞ்சிவதருமமென்ப

---

(௪) சோமசுந்தரன் - உமையோடுகூடியவழகன். (௬) சமஷ்டி-சோலை போற்றொகையாயுள்ளது; வியஷ்டி-மரம்போல் தனியாயுள்ளது. (௯) தேவர்க்குள்ளே சிவபெருமான்பிராமணன் விஷ்ணுக்ஷத்திரியன் பிரமன்வைசியன் இந்திரன் சூத்திரன்; ஏனைய தேவர்கள் சங்கரசாதிகள் [illegible] [illegible] முதலியகூறின் பகவனேயுயர்ந்தோனென்றார்.

வின்மைசானெறிநின்றோருக்கேற்பநற்கலங்கடம்மி
னன்மைசான்றவரேமுக்கணாதனுக்கன்புபூண்டோர். (௧௦)

தீயவான்சுவைப்பாலாவிற்றேவராவதிகம்பல்வே
றாயமாதீர்த்தங்களுளதிகமாஞ்சுவணகஞ்ச
மாயமாசறுக்கவெல்லாத்தலத்திலும்விதந்துமன்னுந்
தூயவானவரிற்சோமசுந்தரன்சிறந்தோனாகும். (௧௧)

அந்தமுமுதலுமில்லாவகண்டபூரணமாயார்க்கும்
பந்தமும்வீடுநல்கும்பராபரசோதிதானே
வந்தனைபுரிவோர்க்கிம்மைமறுமைவீடளிப்பானிந்தச
சுந்தரவிலிங்கத்தென்றுமவிளங்குவானசுருதியேத்த. (௧௨)

இத்தகுசயம்புதன்னையேனையசயம்புவெல்லா
நித்தமுந்தரிசித்தேத்துநிர்மலவொளியாமிந்த
வுத்தமவிலிங்கங்கண்டோருரையுணர்வொடுங்கவுளோ
சித்தமாமொழியதந்தோன்றுஞ்சிவபரஞ்சுடரைக்கண்டோர். (௧௩)

இத்தனிச்சுடரைநோக்கண்டிறைஞ்சினோர்பாவமெல்லாங்
கொத்தழற்பொறிவாய்ப்பட்டபஞ்சுபோற்கோபமுள
மெய்த்தவஞ்சிதையுமாபோன்மருந்தினால்வீயுநோய்போ
லுத்தமகுணங்களெல்லாமுலோபத்தாலழியுமாபோல் (௧௪)

கலிகடலிரவிதோன்றக்கருகிருளுடையுமாபோ
லொலிகெழுபெருங்காற்றள்ளவுடைபடுமேகம்போல
வலிகெழுமடங்கல்சீறமாயுமால்யானைபோலக
குலிசவல்லேறுதாக்கப்பொடிபடுங்குன்றம்போல (௧௫)

மருட்சிசெய்காமநோயான்மதிகெடுமாறுபோல
வருட்சிவஞானநோக்கால்வலிகெடுமவிச்சைபோலத
தருக்குறுமுவணஞ்சீறத்தழலராவிளியுமாபோற்
செருக்குறவழியுங்கற்றகல்விபோற்சிதையுமன்றே (௧௬)

புலரியிற்சிவனைமுத்திபுரேசனைக்காணப்பெற்றா
லலைகடனன்குட்பட்டவவனிமாதானஞ்செய்த
பலனுறுவுதகிர்காலுச்சிலைவகலிற்பணியப்பெற்றாற்
கலைஞர்பானூற்றுப்பத்துக்கபிலைமாதானப்பேறாம். (௧௭)

விண்ணிடைப்பரிதிப்புத்தேண்மேலைநீர்குளிக்குமெல்லை
யண்ணலைவணங்கிற்கோடியானினத்தானப்பேறாம்.

---

(௧௦) இன்மை - இல்லின்றன்மை, கலம்-தானபாத்திரம். (௧௧) தீ-இனிமை

நல்வகைமுகமனீரெட்டினொடும்வடித்தவிரைநன்னீராட்ட
வல்லவர்நூறுயிரமாமேதமகப்பயன்பெறுவர்வாசநான
மெல்லவிர்குங்குமஞ்சாந்தமிவைபலவுமட்டித்தோரெழிலார்தெய்வ
மூல்லைநகையாரோடும்விரைக்கலவைகுளித்தின்பமூழ்கிவாழ்வார்.

நன்மலரொன்றாலவாயான்முடிமேற்சாத்தினுனைய்ந்துநூறு,பொ
ன்மலர்கொண்டயற்பதியிற்பூசித்தபயனெய்துமபுனிதபோகத், தன்
மைதருசுந்தரற்குத் தூபமொருகாற்கொடுப்போர் தமக்குத்தாங்கள்,
சொன்மனமெய்யுறசெய்தகுற்றமாயிரம்பொறுப்பன்சுருதிநாதன.

திருவமுதுநிவேதிப்போரவிழொன்றற்குகமொன்றுசிவலோக
த்தின், மருவிநிறைபோகமுடன்வைகுவர்தாம்பூலமுகவாசமீந்தோர்,
பொருவரியகடவுளராண்டொருநூறுகோடிசிவபுரத்துவாழ்வா,ரொ
ருபளிதவிளக்கிடுவோர்வெண்ணிறமுநகண்ணுதலுமுடையராவார்.

நறுந்திரு மஞ்சனமெடுக்ககுடமாட்டமணிகலச நல்லவாசம்,
பெறுநதகையதூபக்காநீபநகான் மணியின்னபிறவுநகங்குற், றெறு
ங்கதிர்கான்மணிமாடமதுரைநாயகர்கதந்தோர்செயதபாவம், வெறு
ந்துகள்செயதைம்பொறிகுகும்விருநதூட்டும்பெருநகாம்வெள்ளத்தா
ழ்வார். (உஅ)

கயலிசைசாங்கண்ணுமைகோனதிருமுன்னர்ப்பல்லியமுங்கல்லெ
ன்றார்ப்ப, வியலிசையபாடலிசைநாடலிவைசெய்விப்போரிறுமாப்
பெய்திப், புயலிசையவியங்கலப்பமூவலகுந்தொழவரசாய்ப்பொலங்
கொம்பாடுஞ், செயலிசையவணங்கனையாராடரங்குகண்டின்பச்செ
ல்வத்தாழ்வார். (உகூ)

ஒருகாலட்டாங்கமுடன் பஞ்சாங்கமுடனுதலொண்செங்கால்
வெண், குருகாலுமலர்த்தடஞ்சூழ்கூடலுயகர்ப்பணிவோர்கோனெ
ன்றேசிப், பொருகாலின் வருபரித்தேர் மன்னவராயாவருந்தம்பு
டைவந்தெய்தி, யிருகாலுந்தலைவருடவெக்காலுநதமைவணங்கவிருப்
பரன்றே. (௩௰)

இத்தகையதிருவாலவாயுடையான்றிருமுன்னரியற்றுமோம
மெய்த்தவமந்திரந்தானமின்னவனுவனவெனினுமேருவாகு
முத்தமமாமிவ்விலிங்கப்பெருமையெலாம்யாவரளந்துரைப்பர்வேத
வித்தகரேசிறிதறிந்தவாறுரைத்தேமினிப்பலகால்விளம்புமாறென். ()

(உஅ) முகவாசம்-தக்கோலம் ஏலம் இலவங்கம் பச்சைக்கர்ப்பூரம்
சாதிக்காய். ஆக ரு.

காண்டம்.

இத்தலத்துக்கொப்பாக வொருதலமும்பொற்கமலமென்னுமிந்த, வுத்தமமாதீர்த்தத்துக்கொப்பதொருதீர்த்தமுமெய்யுணர்வானந்த, வித்தனைய விலிங்கமிதற்கொப்பாவோ ரிலிங்கமும்பார்விண்மேலென்னு, முத்தலத்துமிலையந்தமூர்த்திதிருநாமங்கண்மொழியக்கேண்மின். (௧௨)

கருப்பூரசுந்தரன்பூங்கடம்பவனசுந்தரனுட்கரவாத்தொண்டர்
விருப்பூருங்கலியாணசுந்தரனல்லறவடிவாயவிளங்குமேற்றுப்
பொருப்பூருமபிராமசுந்தரன்றேன்புடைகவிழப்பொன்னிற்பூத்த
மருப்பூசுசண்பகசுந்தரன்மாடசுந்தரன்றான்வாழிமன்னே. (௧௩)

மான்மதசுந்தரனகொடியபழியஞ்சுசுந்தரனோர்மருங்கின்ஞானத்
தேன்மருவியுறைசோமசுந்தரன்றேன்செவ்வழியாழ்செய்யப்பூத்த
கான்மருவுதடம்பொழில்சூழாலவாய்சசுந்தரன்மீன்கணங்கள்சூழப்
பான்மதிசூழ்நான்மாடக்கூடனாயகன்மதுராபதிக்குவேந்தன். (௧௪)

சிரநாலோன்பரவரியசமட்டிவிச்சாபுரநாதன்சீவன்முத்தி
புரநாதன்பூவுலகசிவலோகாதிபன்கன்னிபுரேசன்யார்க்கும்
வரநாளுந்தருமூலலிங்கமெனவிவைமுதலாமாடக்கூட
லரனாமமின்னமளப்பிலவாகுமுலகுய்யவவ்விலிங்கம். (௧௫)

பாதளமேழுருவ முளைத்தெழுந்த தவ்விலிங்கப்படிவந்தன்னு, ளாதாரமாகவமர்ந்தறுபத்துநாலுவிளையாடல்செய்த, போதானந்தன் பெருமைசங்குரவன் மொழிப்படியேபுகன்றேமென்றான், வேதாதி கலைதெரிந்தமலயமுனிகேட்டறவோர்வினுதல்செயவார். (௧௬)

அருட்கடலேயிறைவிளையாட்டறுபத்துநான்கென்றாயவையானந்தப், பொருட்கடவுளெக்காலத்தியாவர்பொருட்டாடினனெம்போதந்தேறத், தெருட்படவரன்முறையாற்செப்புகெனக்கரங்குவித்தார்தென்பால்வெற்பி, விருப்பவனும்வினையபடிக்கிறைவிரம்பத்தொகுத்துவிரித்தியம்புகின்றான். (௧௭)

மூர்த்திவிசேடப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௨௮.

மதுரைக்

திருவிளையாடற்றொகையாகிய

# பதிகப்படலம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வானவர்கோன்பழிதொலைத்தவிளையாட்டுவெகரிசாபமாய்த்தவாறு
மீனவர்கோன்காடெறிந்துபுரங்கண்டபெருஞ்சிறப்புமீனநோக்கி
யானதடாதகையழல்வாயவதரித்துப்பாராண்டவருளுமீசன்
றானவளைமணஞ்செய்துமுடிதரித்துமண்காத்ததகைமைப்பாடும்.(௧)

புலிமுனியும்பணிமுனியுந்தொழவெள்ளிமன்றுணடம்புரிந்தவா
றும், வலிகெழுதோட்குண்டகட்குறட்கன்னக்குன்றளித்தவகை
யும்பின்னு; நல்பசிநோய்கெடவன்னக்குழியழைத்துக்கொடுத்துநீர்
நசைக்குவைகை, யங்குபுனல்கூயருத்தியதும்பொன்மாலைகெழுகட
லுமழைத்தவாறும (௨)

அந்தார்கோனுசனத்திலுமைமலயத்துவசனைமீண்டழைத்தவா
றும், கந்த வுக்கிரகுமாரனவதரித்தவாறு வளைசுடர்வேல்செண்டு,
தந்தையிடத்தவன்பெற்றவாறுமயனல்வடிவேல்சலதியீறு, சிந்தவி
டுத்துமகவானமுடியைவளையெறிந்திறையன்சிதைத்தவாறும். (௩)

பொன்னசலந்தன்னைச்செண்டாற்புடைத்துநிதியெடுத்ததுவும்பு
னிதாக்கிசன, புன்னரியாரூபபொருளைப்பகர்ந்ததுவுமாணிக்கம்ப
கர்ந்தவாறு, தொன்னகர்மேல்வீசக்கிழவனவாவிடுத்தகடல்சுவறத்
தொலைத்தவாறு, மன்னுதண்டமிழ்த்தொன்மதுரைநான்மாடக்கூடனகரா
னவாறும (௪)

வட்டவொள்சடையுடையசித்தராய்விளையாடியதோர் வனப்புநகையி
கட்டங்கந்தரித்தபிரான்கல்லானைகரும்பருந்தக்காட்டுமாறு, [ற்
மூட்டங்குவஞ்சனையாலமணர்விடுவாரணத்தையொழித்தவாறு
மிட்டங்கொள்கௌரிமுனம்விருத்தனிளையோன்குழவியானவாறும்.

செய்யதாண்மாறிநடமாடியதும்பழியஞ்சுதிறனுந்தாயை
மையலாற்புணர்ந்தமகன்பாதகத்தைமாற்றியதுமதியாதாசான்
றையலாட்டனைவிரும்புமாணவனைவாளமரிற்றடிந்தவாறும்
பையராவெய்த்ததுவும்படிற்றமணர்விடுத்தபசுப்படுத்தவாறும். (௬)

அறவேற்றுப்பரியுகைத்துமெய்க்காட்டுக்கொடுத்தவிளையாட்டு
காட்டுஞ், சுறவேற்றக கொடியரசன் றனக்குலவாக் கிழிகொடுத்த

(௧) வளை - சக்கரம.

காண்டம்.

தொடர்புநாய்கர், நறவேற்றமலர்க்குழலார்மனங்கவர்ந்துவளைபகர்ந்த
நலனுமாறு, மறவேற்கண்மாதரார்க்கட்டமாசித்தியுறைதித்தவாறும்.

சென்னிபொருட்டெயில்வாயிற்றிறந்தடைத்ததுவிடைபொறித்த
செயலுஞ்சென்னி, மன்னிகலிட்டமர்விளைப்பமீனவற்குநீர்ப்பந்தர்
வைத்தவாறும், பொன்னனையாள்பொருட்டிரதவாதவினைமுடித்த
துவம்புகார்க்குவேந்தன், றனையகனகுழிவீட்டித்தென்னவற்கும
றவாகைதந்தவாறும். (அ)

முனக்கவலைகெடவுலவாக்கோட்டையடியாற்களித்தவகையுமா
ற, னெனக்கருணைவடிவாகியழக்குறைதத்துப்பொருள்வணிகற்கீந்த
வாறுஞ், சினக்கதிர்வேல்வரகுணற்குச்சிவலோகங்காட்டியதூஉமிய
வக்கோலான், றனக்கடிமையெனவிறகுதிருமுடிமேற்சுமந்துபகை
தணித்தவாறும். (கூ)

அப்பாணற்கிருநிதியஞ்சேரனிடைத்திருமுகமீந்தளித்தவாறு
மப்பாணன்பாடன்மதுரையமரையிரவிற்பொற்பலகையளித்தவாறு
மப்பாணன்மனைவியிசைப்பகைவெல்லவயணலவையடைந்தவாறு
மப்பாணனுள்ளன்றேனமுலையருத்திப்பன்றியுயிரளித்தவாறும். ()

வயவேனக்குருளைகளைமந்திரிகளாக்கியதூஉமலியுண்டாகக
கயவாயக்குக்குருமொழிவைத்தருளியதூஉநாரைக்குக்கருணைநாட்டந்
தயவால்வைத்தருண்முத்திநல்கியதூஉங்கூடனகர்தன்னைச்சித்தர்
புயநாகம்போயவளைந்துதிருவாலவாயாக்கிப்போந்தவாறும் (கக)

சுந்தரனென்றெழுதியகூரம்பெய்துசெம்பியன்போர்தொலைத்
தவாறுஞ், செந்தமிழோராக்கியபலகையருளியதூஉந்தருமிக்குச்செம்
பொனவாடித், தந்ததூஉமாறுபடுகீரற்குக்கரையேற்றந்தந்தவாறும்,
விந்தமடக்கியமுனியாற்கீரனியற்றமிழ்தெளியவிசைத்தவாறும். (கஉ)

ஊமனாற்புலவர்கலகமறியீரிடைக்காடனுடன்போயக் கொன்றை
தாமனூர்வடவாலவாயமர்ந்தபரிசும்வலைசலதிவீசிப் [த்
பூமனையகுழலியைவேட்டருளியதூம்வாதவூர்ப்புனிதர்க்கேறத்
தேமனுண்மலரடிகண்முடிசூட்டியுபதேசஞ்செய்தவாறும். (கங)

நரிகள்பரியாக்கியதூம்பரிகணரியாக்கியதூநாகம்பூண்டோ
னரியதிருமேனியின்மேலடிசுமந்துமண்சுமந்தவருளுந்தென்ன
னெரியவெஞ்சுரந்தணித்தவாறுமமணரைக்கழுவிலிட்டவாறுங்
கரியதென்னவன்னிகிணறிலிங்கங்கூயவணிகமகட்காத்தவாறும். (கச)

எனத்தொகையாலறுபத்துநான்கிவற்றைச்சிறத்தமுறையீறின்றி, வினைத்தொகையாறகன்றீரெக்காலமெவர்பொருட்டெனநீர்வி னுயவாற்றான், மனத்தளவிலன்புமடையுடைந்தொழுகத்திருவால வாயான்றனை, நினைத்தளவிலானந்தம்பெருக்கவிரித்துரைப்பனெனை நெறியாற்கூறும். (க[illegible])

பதிகப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௪௯.

உ

சிவமயம்

முதலாவது

# இந்திரன்பழிதீர்த்தபடலம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மின்பயில்குலிசப்புத்தேள்விருத்திராசுரனைக்கொன்ற
வன்பழிவிடாதுபற்றக்கடம்பமாவனத்திலெய்தி
யென்பரவாரம்பூண்டவிறைவனையருச்சித்தேத்திப்
பின்பதுகழிந்துபெற்றபேற்றினையெடுத்துச்சொல்வாம். (க)

முன்னநான்முகத்திலவண்டுமூசுமந்தாரநீழற்
பொன்னவிர் சுணங்குண் கொங்கைப் புலோமசைமணாளன்பொற்பூ
மின்னவிர்ந்திமைப்பசிங்கஞ்சுமந்தமெல்லணைமேன்மேவி [ண்
யன்னமென்னடையாராடுமாடன்மேலாவல்வைத்தான். (உ)

மூவகைமலருமபூத்துவண்டுளேமுழங்கத்தெய்வப்
பூவலர்கொடிபோன்றன்னபொன்னனார்கூத்துமன்னார்
நாவலரமுதமன்னபாடலுநாகநாட்டுக்
காவலன்கண்டுகேட்டுக்களிமதுக்கடலுளாழ்ந்தான். (௩)

பையராவணிந்தவேணிப்பகவனேயனையத்திங்க
ளையனும்வியாழப்புத்தேளாயிடையடைந்தானாகச்
செய்யதாள்வழிபாடின்றித்தேவர்கோனிருந்தானந்தோ
தையலார்மயலிற்பட்டோர்தமக்கொருமதியுண்டாமோ. (௪)

(௩) மூவகைமலர் - கோட்டுப்பூ நீர்ப்பூ நிலப்பூ.

(௪) ஐசுவரியம் வீரியம் புகழ் திரு ஞானம் வைராக்கியம் என்னும் ஆறுக்கும் பகமென்னும் பெயருண்மையால் பகவனென்பதற்கு இவ்வாறு குணமும் உடையனென்பதுபொருள்.

[illegible]

ஒல்லெனக்குரவனேகவும்பர்கோனிருவினைக்கம்
புல்லெனச்சிறிதுகுன்றப்புரந்தரனறிந்திக்கேடு
நல்லதொல்குரவற்பேணாமையினால்விளைந்ததென்று
வல்லனுற்றறிவன்றன்னைத்தேடுவானாயினானே. (௬)

அங்கவனிருக்கைபுக்கான்கண்டிலனவித்தபாசப்
புங்கவருலகுமேனோர்பதவியும்புவனமூன்றி
லெங்கணுந்துருவிக்காணானெங்குற்றான்குரவனென்னுஞ்
சங்கைகொண்மனத்தனாகிச்சதுர்முகனிருக்கைசார்ந்தான். (௭)

துருவினனங்குங்காணான்றிசைமுகற்றொழுதுதாழ்ந்து
பரவிமுன்பட்டவெல்லாம்பகர்ந்தனன்பகர்ந்தகேட்டு
குரவனையிகழ்ந்தபாவங்கொழுந்துபட்டருந்துனுஞ்செவ்வி
வருவதுநோக்கிச்சூழ்ந்துமலர்மகனிதனைச்சொன்னான். (௮)

அனையதொல்குரவற்காணுமளவுநீதுவட்டாவீன்ற
தனயன்முச்சென்னியுள்ளான்றானவாகுலத்தில்வந்தும்
வினையினலறிவான்மேலான்விச்சுவவுருவனென்னு
மினையனைக்குருவாகக்கோடியென்னலுமதற்குநேர்ந்தான். (௯)

அழலவிர்ந்தனையசெங்கேழகிதழ்முளரியாழ்க்கைத்
தொழுதகுசெம்மறன்னைத்தொழுதுமீண்டகனாடுநீங்கா
விழைதகுகாதல்கூரவிச்சுவவுருவன்றன்னை
வழிபடுகுருவாக்கொண்டான்மலர்மகன்சூழ்ச்சிதேறான். (௧௦)

கைதவக்குரவன்மாயங்கருதிலன்வேள்வியொன்று
செய்திடலடிகளென்னத்தேவர்கட்காக்கங்கூறி
வெய்தழல்வளர்ப்பானுள்ளம்வேறுபட்டவுணர்க்கெல்லா
முய்திறநினைந்துவேட்டான்றனக்குமேலுறுவதோரான். (௧௦)

வாக்கினான்மனத்தால்வேறாய்மகஞ்செய்வான்செயலையாக்கை
நோக்கினானோகிதன்னானோக்கினான்குலிசவேலாற்
றாக்கினான்றலைகண்மூன்றுந்தனித்தனிபறவையாகப்
போக்கினானலகைவாயிற்புகட்டினான்புலவுச்சோரி. (௧௧)

தெற்றெனப்பிரமபாவஞ்சீறிவந்தமரர்வேந்தைப்
பற்றலுமதனைத்தீர்ப்பான்பண்ணவர்மரமேன்மண்மேற்

(௧௦) செய்திடல்-செய்க வென்னும வியங்கோள் வினைமுற்று; இது பின்னரும்வரும். (௧௧) சோமபானஞ்செய்யும முகமுடையதலையைக் காடையாகவும், சுராபானஞ்செய்யும் முகமுடைய தலையை ஊர்க்குருவியாகவும், அன்னபானஞ் செய்யும் முகமுடைய தலையைச் சிச்சிலியாகவும போக்கினானெனக்கொள்க.

பொற்றொடியார்மேனீர்மேல்வேண்டினர்புகுத்தலோடு
மற்றவரிஃதியாநீர்க்கும்வண்ணமியாதென்னவிண்ணோர். (கஉ)

அப்பிடைநரையாய்மண்ணிலருவருப்புவராயம்பொற்
செப்பிளங்கொங்கையார்பாற்றீண்டுதாகரியபூப்பாயக்
கப்பிணர்மரத்திற்காலும்பயினதாயக்கழிகவென்று
ரிப்பழிசுமந்தவெங்கட்கெனனலமெனறூர்பினலும். (கங)

மேற்படிவேறு.

கருவின்மாதர்கருவுயிர்க்குமளவுமுறையாற்கணவர்தோள்
மருவிவாழ்கமண்ணகழ்ந்தகுழியுமதனுல்வுடுமொழிக
பொருவினீருமிறைதோறுமூறிபொலிக மாங்குறைபட்
டொருவிஞலுநதழைகவெனமொழியாலனுமுதவினேர். (கச)

மாசிற்கழிந்தமணியேபோல்வந்தபழிதீர்ந்திந்திரனுந்
தேசிற்றிகழத்துவட்டாதனசெல்வனறனைத்தேவர்பிரான்
வீசிகுலிசத்துயிருண்டவிழுமங்கேட்டுவெகுண்டுயிர்த்துக
சடிசப்பழிகோளகருதியொருகொடியவேள்விகடிதமைத்தான். (கரு)

அந்தகருண்டத்தெரிசிகைபோலழலுங்குஞ்சியணடமுக
டுந்தகுகொடியதாமம்போலுயிர்த்துசசெங்கண்சினசசெந்தீச
சிந்தப்பிறைவாளெயிறதுககிததிசைவானசெவிடுபடநகைத்து
வந்தகக்கொடியவிடமபோலவெழுந்தானெருவாண்மறவீரன். (கசு)

கலிவிருத்தம்

ஈங்குவனவிருத்திரனென்னபயாரழற்
றூங்குவனகணைவிடுதாரநீணடுநீண்
டோங்குவனெங்குதறகொப்பமையகலும்ப
வீங்குவனறனிலாரவிணையிலென்னபயே (கஎ)

வீங்குடல்விருத்திரனறனைவிணணவ
ரேங்குறவருதுவட்டாவெனுமபெயாத
தீங்குறமனத்திஞனறேவர்கோனுயிர்
வாங்குதிபொருதெனவரவிட்டானரோ. (கஅ)

மதித்தணியெயிற்றினேன்வடவைபோற்சினேஇக்
கொதித்தெதிர்குறுகினன்கொண்டலூர்திபு
மெதிர்த்தனனகளிற்றின்மேலிமையத்துசசிமே
லுதித்ததோர்கருங்கதிரொக்குமென்னவே. (கக)

(கக) பயினை - பிசின.

**காண்டம்.**

அறத்தொடுபாவநேர்ந்தென்னவார்த்திரு
திறத்தருளூண்டமாசெயயக்கற்சிறை
குறைத்தவன்றருவன்மேற்குலிசவேலெடுத்
துறைத்திடவீசினனுடன்றகள்வனும். (உ0)

இடித்தனன்கையிலோரிருப்புலக்கையைப்
பிடித்தனன்வரையெனப்பெயர்ந்துதீயெனத்
துடித்தனன்சசிமுலைசசுவடுதோயபுயத்
தடித்தனனிந்திரனவசமாயினன். (உக)

அண்டரேறனையவனவசமாதலும்பின்
கண்டகன்கைதவனீனைந்திக்கள்வனோர்
மண்டமராற்றுவான்வலியிலோமெனப்
புண்டரீகத்தவனுலகிறயோயினன். (உஉ)

தாழ்ந்துதான்பணிதுயர்விளம்பத்தாமரை
வாழ்ந்தவன்வலாரியோடணைந்துமாமகள்
வீழ்ந்தமாயினனடிவீழ்ந்துசெப்புமால்
சூழ்ந்துவாறுடனேநோக்கிசசொல்லுவான (உங)

ஆற்றவம்பறையுந்துன்னவகைசசிவ
மாற்றவருயிருணவல்லினருதலால்
யேற்றொருபுதியதுவேண்டுமாலினிச
சாற்றுதுமதுபெறுந்தகைமைகேட்டியால். (உச)

தொடையகன்மார்பநாந்தூயபாற்கடல்
கடையுநாளசுரருஞசுரருநகையில்வெம்
படையொடுமடையனன்பழுதென்றப்படை
யடையவுந்தீசிபாலடைவிததாமரோ. (உரு)

சேட்படுநாணனிசெல்லத்தேவரா
வாட்படையவுணராவந்துசேட்டிலர்
ஞாட்படைபடையெலாஞானநோக்கினல்
வேட்படைவெனறவனவிழுங்கினனரோ. (உசு)

விழுங்கியபடையெலாம்வேறறத்திரண்
டொழுங்கியதானமுதுகந்தண்டொன்றியே

---

(உசு) விகற்பப்பொருளில்வருமஆதல் என்னுமிடைச்சொல் [illegible]க்கு, தேவராஅவுணரா என நின்றது.

யெழுங்கதிர்க்குலிசமாமதனையெய்துமுன்
வழங்குவன்கருணையோர்வடிவமாயினான். (உஎ)

மேற்படி வேறு.

என்றுமாதவனியம்பவும்பாகோ
னென்றும்வானவர்த்தமமொடொல்லெனச்
சென்றுமாயையின்செயலைநோன்பினால்
வென்றமாதவனிருக்கைமேவினான (உஅ)

மேற்படிவேறு

அகமலர்ந்தருந்தவனமராநகனடுகூர்
முகமலர்ந்தினனுரைமுகமன்கூறிநீ
மகமெலிந்தெய்தினீர்விளைந்ததியாதது
நகமொழிந்திடலெனவலாரிசாற்றுவான். (உகூ)

அடிகணீரமருத்தொன்றதனைம்வண்டியிம்
முடிகொள்வானவரொடுமுந்தினனது
செடிகொள்காரிருளுடலவுணர்தேயத்தெமர்
குடியெலாம்புரப்பதோர்கொள்கைத்தாயது. (௩௦)

யாதெனினிவையதுனயாக்கையுள்ளதென்
றோதலுமியாவையுமுணர்ந்தமாதவ
னுதவுறக்கண்டதாமரையினானனப்
போதலர்ந்தின்னனபுகல்வதாயினான. (௩க)

நாயகமதெனநரிகமதெனப்பிகா
தாயகமதெனநமனறனதெனப்பிணி
பேயகமதெனமனமதிக்குமபெற்றிபோ
லாயகமதெனப்படுமயாக்கையாரதே. (௩உ)

விடம்பயிலெயிற்றரவுரியும்வீறுழை
னுடம்பையுந்தானென்றுங்கொள்கைத்தேகொலா
நடம்பயில்கூத்தரினடிகளைமவர்வா
முடம்பையும்யானெனவுரைக்கற்பாலதோ. (௩௩)

நடுத்தயாவிலார்தமைநலியத்துன்பநோ
யடுத்தயாவருந்திருவுடையயாக்கையைக்
கொடுத்தயாவறம்புகழ்கொள்வனேயெனி
னெடுத்தயாக்கையின்பயனிதனின்யாவதே. (௩௪)

---

(உஅ) மாதவன்-இலக்குமி நாயகன்; பெருமைபெற்ற தவத்தன்.

(௩௪) நடு தயா இலார் - நடுவுநிலைமையும் தயையுமில்லார். மூன்றாமடியில் ஐயா என்பது அயாவெனப்போலியாயிற்று.

தொக்கனகழுகுசேனஞ்சொரிகுடர்பிடுங்கியீர்ப்ப
வுக்கனகுருதிமாந்தியொட்டல்வாய்க்கெட்டைப்பேய்க
ணக்கனபாடல்செய்யஞாட்பினுட்கவந்தமாடப்
புக்கனபிணத்தின்குன்றம்புதைத்தபார்சிதைத்ததண்டம். (௪௩)

இவ்வகைமயங்கிப்போர்செய்திறந்தவரொழியப்பின்னு
மைவகையடுபோராற்றிக்கரையிறந்தார்கண்மாண்டா
ரவ்வகையறிந்துவானத்தரசனுமவுணர்வேந்துந்
தெய்வதப்படைகள்வீசிச்சீறிநின்றடுபோர்செய்வார். (௪௪)

அனற்படைவிடுத்தான்விண்ணோராண்டகைப்பகைஞன்வான
புனற்படைவிடுத்துச்சிந்தத்துணித்தனன்புனிதன்காற்றின்
முனைப்படைவிடுத்தான்வெய்யோன்முழங்குகால்விழுங்குநாகச்
சினப்படைதொடுத்துவீசிவிலக்கினன்றேவரஞ்ச (௪௫)

நாகமாப்படைவிட்டார்த்தானாககோனுவணச்செல்வன
வேகமாப்படையைவீசிவிலக்கினன்றகுவாவேந்தன
மோகமாப்படையைத்தொட்டுமுடுக்கினன்முனையனன்ன
தேகமாப்படிறனஞானப்படைவிடுத்திருள்போக்கினானே. (௪௬)

மட்டிடுதாரான்விட்டவானவப்படைக்குமாறு
விட்டிடன்விலக்கிவேறும்விடுத்திடக்கனன்றவுணன்
முட்டிடமானவெங்கானமூட்டிடக்கோபச்செந்தீச்
சுட்டிடப்பொறுத்துப்பொங்கிச்சுராதிபனிதனைச்செய்தான். (௪௭)

வீங்கிருளொதுங்கமேகமின்னவிர்ந்தென்னக்கையி
லோங்கிருங்குலிசவேலையொல்லெனவிதிர்த்தலோடுந்
தீங்குள்ம்போன்றிருண்டதிண்ணியுடற்கள்வனஞ்சி
வாங்கிருங்கடலில்வீழ்ந்தானமறைந்தமைநாகமொத்தான். (௪௮)

ஒக்கவிந்திரனும்வீழ்ந்தானுடல்சினவுருமேறனனை
புக்கிடந்தேடிக்காணான்புண்ணியமுளரியண்ணல்
பக்கம்வந்தனையசெய்திபகர்ந்தனன்பதகன்மாளத்
தக்கதோர்சூழ்ச்சிமுன்னிச்சராசரமீன்றதாதை. (௪௯)

விந்தவெற்படக்கினற்கீதுரையெனவிடுப்பமீண்டு
சந்தவெற்படைந்தான்வானோர்தலைவனைமுகமன்கூறிப்
பந்தவெற்பறுத்தான்வந்ததெவ்வெனப்பறைகளெல்லாஞ்
சிந்தவெற்பறுத்தான்வந்தசெயலெலாமுறையாற்செப்பி. (௫௦)

---

(௪௮) வேல் - ஆயுதம். (௫௦) பறை-சிறை.

**காண்டம்.**

யாவையுமுணர்ந்தவெந்தைக்கியானெடுத்துணர்த்துகின்ற
தாவதென்னமருககாற்றுதாழிபுககொளித்தானுவி
வீவதுமவனுல்வந்தவிழுமமேனோயெல்லாமின்று
போவதுங்கருதிநம்பாற்புகுந்தனமடிகளென்றான். (௫௧)

என்றவனிடுக்கணூடாப்பாணிகலபுரிபுலனகளைநதும
வென்றவனெடியோன்றனைவிடையவனடியாராகி
நின்றவனறிவானந்தமெய்யமைமையாயச்சிறந்தவெள்ளி
மன்றவனூழிசசெந்தீயடிவினைமனத்தகொடகொண்டான். (௫௨)

கைதவன்காந்துவைகுங்கடலேவெறபடக்குங்கையிற்
பெயதழுநதெல்லைததாக்கிபபருகினனபிறைசோசென்னி
யையனதருளைப்பெற்றாககதிசயமிதெனகொனமூனறு
வையமுதவெதாழிலூனசெயயயல்லவாவமோயனமேற (௫௩)

அறநதுறநதிடுகிவொரதபருமபறறசெலவ மபால
வறநதனபடுநீர்ப்பெளவமவடவைகட்புலப்பட்டாங்கு
நிறைநதசெமமணியுநதிணடெரிசிகைபோனிணங்கு
சிறநதெழுபவளககாநதிணியிருளவிழுங்கிறறமாமா (௫௪)

பணிகளின்மகுடமேசாடியப பொனவிளங்கிப்பல்கா
சணிகலப்பேழைபேழவாயதிறநதனெததாங்கியானையான
மணிகிடநதிமைககுநீரானமசபதியெனவிசகாயாயத
திணியுடலவுணனபட்டசெங்களாரனையதனமேற. (௫௫)

வறநதமோதனனினகனறுவாளவிநதெதனனபபணமீ
னெறிநதனசெளிநதாகதனைததனயனையுபுகநது
செறிந்தனகரநதயாமைசோநதபல்பணடருசிநதி
முறிந்தனவஙகயஙகஙகமுககினசிறமீனலலாம். (௫௬)

செருவினிலுடைந்துபோனசெஙகண்வாளவுணனங்கோ
ரருவரைமுதுகிற்கார்போலடைநதுவாருடர்செயத
வுருகெழுபாவந்தானேருருவெடுத்திருநதுநோற்கும்
பரிசெனநோற்றனின்னுமபரிபவவிளைவுபாரான். (௫௭)

கைதவநோன்புநோற்குஙகள்வனைககண்டுவானோர்
செய்தவமனையான்போணர்வசிரஞ்சேரிபபான்போற்

---

(௫௨) நெடியோனை விடையவனுக்கியது கந்தபுராணம் திருக்குற்றாலப் படலத்திற்காண்க. (௫௫) அவுணன் - தலாசுரன; இவன் சரிதம் மாணிக்கம் விற்றபடலத்துட்காண்க. (௫௭) உரு - அச்சம், பரிபவம் - துன்பம்.

(௫௮) சோதித்தல்-பரீக்ஷித்தல்,

பொய்தவன்றலையைக்கொய்தான்புணரிவாய்நிறையச்சோரி
பெய்தநுவலாரிதன்னைப்பிடித்ததுபிரமசாயை. (௫௮)

உம்மெனுமார்பைத்தட்டுமுருத்தெழுமதிர்க்கும்போர்க்கு
வம்மெனும்வாய்மடிக்கும்வாளெயிறதுக்கும்வீழுங
கொம்மெனவோடுமீளுங்கொதித்தழுஞ்சிரிக்குஞ்சீறு
மிம்மெனுமளவுநீங்காதென்செயவானஞ்சினனே. (௫௯)

விரைந்தரன்றிசையோர்வாவிவீழ்ந்தொருகமலநாளுட்
கரந்தனன்மகவானிப்பாற்கற்பகநாடுபுல்லென்
றிருந்ததாலிருக்குமெல்லையிம்பரினகுடனென்போ
னரும்பரிமேதவேள்வியாற்றினனாற்றமெல்லை. (௬௦)

அரசிலாவறுமைநோக்கியவனைவானாடர்யாரும்
விரைசெய்தார்மகுடஞ்சூட்டிவேந்தனாகக்கொண்டார்வேந்தாய்
வருபவன்சசியையீண்டுத்தருகெனமருங்குளார்போய்த்
திரைசெய்நீரமுதனாட்குச்செப்பவக்கற்பின்மிக்காள். (௬௧)

பொன்னுயிர்த்தனையகாட்சிப்புண்ணியக்குரவன்முன்போய்
மின்னுயிர்த்தனையாணின்றுவிளம்புவாளிதென்கொல்கெட்டே
னென்னுயிர்த்துணைவனிங்கேயிருக்கமற்றொருவனென்னைத்
தன்னுயிர்த்துணையாகக்கொள்கைதருமமோவடிகளென்றாள். (௬௨)

மாதவரெழுவர்தாங்கமாமணிச்சிவிகைமீது
போதரினவனேவானோர்புரந்தரனவனேயுன்றன்
காதலனாகுமென்றான்கைதொழுததற்குநேர்ந்தம்
மேதகுசிறப்பாலிங்குவருகெனவிடுத்தாடூது. (௬௩)

மனிதரின்மகவானாகிவருபவன்சிவிகைதாங்கும்
புனிதமாதவரையெண்ணான்புன்கணேயவிளைவும்பாரான்
கனிதருகாமந்துய்க்குங்காதலால்விரையச்செல்வா
னினிதயிராணிபாற்கொண்டேகுநின்சர்ப்பவென்றான். (௬௪)

சர்ப்பமாகெனமுற்கொம்புதாங்கிமுன்னடக்குந்தென்றல்
வெற்பனாமுனிவன்சாபம்விளைத்தனன்விளைத்தலோடும்

---

(௫௯) வம்மெனும்-வா என்றழைக்கும் என்னும் ஒருமைப்பொருளது, "வம்மோசுதரிசனகேண்மோ" என்னும் சேதுபுராணவேதாளவரதச்சருக்கம்-௧௧-வதுசெய்யுளாலுணர்க.

(௬௩) மாதவரெழுவர் - அகஸ்தியர் ஆங்கிரசர் கோதமர் காசிபர் புலத்தியர் மார்க்கண்டர் வசிட்டர்.

(௬௪) சர்ப்ப என்பது - விரைந்து நடக்கவென ஏவுதல்.

**காண்டம்.**
பொற்பமாசுணமேயாகிப்போயினனறிவிலாத
வற்பரானவர்க்குசசெல்வமல்லதுபகைவேறுண்டோ. (சுரு)

டபஎ
பொன்னகர்வேந்தனின்றிப்புலம்படைகின்றதைய
வென்னலுங்குரவன்போயவ்விலஞ்சியுளொளித்தாற்கூவித்
தன்னுரையறிந்துபோந்தசதமகற்கொண்டுமீண்டான். (சுசு)

கொடும்பழிகோட்பட்டானற்குரவனைவணங்கியென்னைச
சுடும்பழிகழிவதெங்ஙன்சொல்லெனத்தொலைவதோர்ந்தா
னடும்பழிமண்மேலன்றியுறுதுநீவேட்டைகசென்னப்
படும்பழியிதனைத்தீர்ப்பானபார்மிசையருதியென்றான. (சுஎ)

புகக்கிழைத்தகுற்றநீத்தசிங்கமன்னணிந்திராக்கு
தேசிகற்கிழைத்தகுற்றங்குரவனேதீர்ப்பதன்றிப
பேசுவதெவனோதனபாற்பிழைத்தகாரணத்தால்வந்த
வாசவன்பழியைத்தீர்ப்பான்குரவனேவழியுங்கூற . (சுஅ)

வாம்பரியுகைத்தூர்தனலுல்வழிபடுகுரவன்வானோர்
தாம்பரிவோடுஞ்சூழத்தராதலத்திழிந்துசெம்பொற்
காம்பரிதோளிபங்கனகயிலைமால்வரையைத்தாழ்ந்து
தேம்பரியலங்கனமாரபனதெனறிசைநோக்கிசசெல்வான். (சுகூ)

மேற்படிவேறு
கங்கைமுதலளவிறந்ததீர்த்தமெலலாம்போயப்படிந்துகாசிகாஞ்சி
யங்கனககேதாரமுதற்பதிகளபலபணிந்துமவுணாற்கொன்ற
பொங்குபழிவிடாதழுங்கியராவுணணமாசுண்டுபொலிவுமாழ்குந்
திங்களனையான்கடம்பவனத்தெல்லையணித்தாகசசெல்லுமெல்லை.

தொடுத்தபழிவேறாகிவிடுத்தகன்றதிந்திரன்றன் சுமந்தபாரம்,
விடுத்தவனுத்தளவிறந்தமகிழ்வெய்தித்தேசிகன்பால்விளம்பப்பாச
ங, கெடுத்தவன்மாதலம்புனிததீர்த்தமுளவிவணமக்குக்கிடைத்தல்
வேண்டு, மடுத்தறிகவெனசசிலரைவிடுத்தல்வேறாகிலின்றப்பாற்
செல்வான். (எக)

அருவிபடிந்தருவியெறிமணியெடுத்துப்பாறையிலிட்டருவிநீர்
தூய்க், கருவிரல்கொயத்லர்சூட்டிக்கனியூட்டிவழிபடுவகல்லாமந்தி,

(சுகூ) காம்பு அரி - மூங்கில. (ஒருபொருட்பன்மொழி.)
(எக) வேறுமங்கை - பழிவேறுபட்ட இடம்.

மதுரைக்

யொருதுறையில் யாளிகரிபுழைக்கைமுகந்தோன்றக்கொண்டூட்டி யூட்டிப், பருகுவனபுலிமுலைப்பால்புல்வாய்க்கன்றருந்தியிமைப்பிலோ ய்தீர. (௭௨)

நெளியராக்குருளைவெயில்வெள்ளிடையிற்கிடந்துழங்கிநெளிய ப்புள்ளே, தெருளியருச்சிறைவிரித்துநிழல்பரப்பப்பறவைநோயுற்ற தேகொ, லளியவாயசசோவென்றேதியயன்மடமாதியருவியூற்றுந், துளியநீர்வளைத்தசும்பின் முகநெடுத்துக் கருணைகையினற்சொரிவ மாதோ. (௭௩)

படவரவ மணியீன்று நொசசிப்பா சிலையன்ன பைந்தாண் மஞ் ஞை, பெடைதழுவிமணஞ்செய்யமணவறையில்விளக்கிடுவபெருந் தண்கானந், தடர்சிறைமென்குயிலோமென்றூர்ப்பமடக்கிள்ளையெழு த்தைந்துமோசைத், தொடாபுபெறவுச்சரிப்பக்குருமொழிகேட்டா ஙகுலப்பதொடிக்கட்பூவை. (௭௪)

இன்னவிலங்கொடு புள்ளின்செயற்கரிய செயனோக்கி யிறும்பூ தெய்திப், பொன்னகரான்புளகமுடல்புதைப்பநிறைமகிழ்ச்சியுளம்பு தைப்பப்போவா, னன்னபொழுதொற்றுவர்மீண்டடிவணங்கியின்சு வைப்பாலருந்துவான்முன், பினனரியதேன்சொரிந்தாங்குவகைமே ற்பேருவகைபெருகச்சொல்வார் (௭௫)

எப்புவனத்திலுமென்றுங்கண்டறியாவதிசயமுமெண்ணுக்கெ ய்தாத், திப்பியமுமிககடமபவனததினறுகண்டுவகைதிளைத்தேமங்க ண், வைப்பனையவொருபுனிதவாவிமருங்கொருகடம்பவனத்தினீழ, லொப்பிலொளியாய்முளைத்த சிவலிங்கமொனறுளதென்றுரைப்பக் கேட்டான். (௭௬)

செவித்துளையிலமுதொழுகக்குழையரொடும்வழிக்கொண்டு சென்னிமேற்கை, குவித்துளமெய்மொழிகரணங்குணமூன்றுமொ ன்றித்தன்கொடியபாச, மவித்துயர்வொழிக்கமுளைத்தருள்குறி மேலன்பீர்ப்பவடைவான்கானங், கவித்துளபூந்தடம்படிந்துகடம்ப வனத்துழைநுழைந்தான்கவலைதீர்வான். (௭௭)

அருவாகியுருவாகியருவுருவங்கடந்துண்மையறிவானந்த, வுரு வாகியனைத்துயிராகியவ்வுயிர்க்கோருணர்வாய்ப்பூவின், மருவாகி ச்சராசரங்களிலமுந்தன்னிடையுதித்துமடங்கநின்ற, கருவாகிமு ளைத்தசிவக்கொழுந்தையாயிரங்கண்ணுங்களிப்பக்கண்டான். (௭௮)

---

* (௭௪) தொடிக்கண் - கைவளைபோலும் வட்டமாகியகண்.

**கசண்டம்.**

கண்டுவிழுந்தெழுந்துவிழிதுளிப்பவெழுகளிப்பென்னுங்கடலி லாழ்ந்து, விண்டுமொழிதழுதழுப்பவுடல்பனிப்பவன்புருவாய்விண் ணோர்வேந்த, னண்டர்பிரானருச்சனைக்குவேண்டுமுபகரணமெலா மகல்வானெய்திக், கொண்டுவரசிலரைவிடுத்தவரேகப்பின்னுமொ ருகுறைறவுதீர்ப்பான். (எக)

தங்குடிமைத்தசசனையோர்விமானமமைத்திடவிடுத்தத்தடத் தின்பாற்போ, யங்கணனைக்கடிதருச்சித்திடநறியமலர்கிடையாதயர் வானந்தச, சங்கெறிதண்டிரைத்தடத்திலரனருளாற்பலபரிதிசலதி யொன்றிற், பொங்குகதிர்பரப்பிமுளைத்தாலென்னப்பொற்கமலம் பூப்பக்கண்டான். (அ0)

அன்புதலைசிறப்பமகிழ்ந்தாடினன்காரணத்தாலதற்குநாம, மெ ன்பதுபொற்றாமரையென் றேழுலகும்பொலிகவென விசைத்துப்பி ன்னு,மின்பதுமத்தடங்குடைந்துபொற்கமலங்கொய்தெடுத்துமீண் டுநீங்காத், தன்பிணிநோயதணியமுளைத்தெழுந்தமுழுமுதன்மருங் கின்றன்பால்வந்து. (அக)

மொய்த்தபுனக்காடெறிந்துகிலந்திருத்திவருமளயின்முளைத்த ஞான, வித்தனையசிவக்கொழுந்தின்றிருமுடிமேற்பரிதிகரமெல்லத் தீண்டச், சித்தநெகிழ்ந்திந்திரன்றன்வெண்கவிகைத்திங்கணிழல் செய்வானுள்ளம், வைத்தனனப்போதிரவிமண்டலம்போலிழிந்த தொருமணிவிமானம். (அஉ)

கிரியெட்டுமெனமழையைக்கிழித்தெட்டும்புழைக்கைமதிக்கிற் றுக்கோட்டுக், கரியெட்டுஞ்சினமடங்கலெட்டுமெட்டெட்டுக்கண முந்தாங்க, விரியெட்டுத்திசைபரப்பமயனிருமித்துதவியவவ்விமா னஞ்சாத்தி, யரியெட்டுத்திருவுருவப்பரஞ்சுடரையருச்சிப்பானுயி ஞேனி (அங)

முந்தவமருலகிடைந்துபூசனைக்குவேண்டுவனமுழுதுந்தேர்வார் வந்துதருவைந்தீன்றபொன்னுடைமின்னுமிழுமணிப்பூண்வாசச சந்தனமந்தாகினிமஞ்சனந்தூபந்திருப்பள்ளித்தாமந்தீப மந்தமிலாவிளர்ந்தாதுங்கனிநீக்கேன்றிருவமுதமினைத்துங்கதூர். ()

நெய்வத்தாமரைமுளைத்ததடம்படிந்துபவந்தொலைக்குந்திருநீ ருடிச்,சைவத்தாழ்வடக்தாங்கியன்புருவாயருளுருவந்தானுய்த்தோ

(அக) என்பது - இடைச்சொல்.
(அக) அரி-இந்திரன். (அச) அமாருலகு அமருலகெனத்தொக்கது.

ன்றும், பைவைத்தாடரவார்த்தபசுபதியையவனுரைத்தபனுவலாற்
றின், மெயவைத்தாதரம்பெருகவருச்சனைசெயதானநதவெள்ளத்
தாழ்ந்தான். (அ௬)

பாராரவட்டாஙகபஞசாஙகவிதிமுறையாற்பணிநதுள்வாயமெய்
நேராகசசூழ்நதுடலங்கம்பித்துக்குமபிட்டுதிருத்தஞ்செய்து
தாராருநதொடை நிதப்பவானநதககண்ணருவிததும்பநின்றன்
பாராமைமீககொள்ளவஞசலித்துத்துதிக்கின்றனமரர்கோமான். ()

மேற்படிவேறு.

அஙகணுபோறறிவாயமையாரணுபோற்றிநாக
கஙகணுபோற்றிமூலகாரணுபோறறிநெற்றிச
செஙகணுபோற்றியாதிவபரஞசுடரேபோற்றி
யெஙகணுயசனேபோற்றியீறிலாமுதலேபோறறி. (அஎ)

யாவையும்படைப்பாயபோற்றியாவையுநதுடைப்பாய்போற்றி
யாவையுமானாய்போற்றியாவையுமல்லாயபோற்றி
யாவையுமறிநதாயபோற்றியாவையுமறநதாயபோற்றி
யாவையுமபுணாநதாயபோற்றியாவையும்பிரிநதாயபோற்றி. (அஅ)

இடருறப்பிணிததவிநதப்பழியினினறெனனையீாத்துன்
னடியிணைக்கன்புறுககுமருட்கடல்போற்றிசேறகண
மடவரனமஞ்ஞளபோற்றிகடமபமாவனததாய்போற்றி
சுடர்விடுவிமானமேயசுநதரவிடஙகபோறறி. (அகூ)

பூசையும்பூசைக்கேற்றபொருள்களும்பூசைசெய்யு
நேசனும்பூசைகொண்டுநியதியிறபேறுநல்கு
மீசனுமாகிப்பூசையானசெயதேனெனுமென்போத
வாசனையதுவுமானமறைமுதலடிகள்போற்றி. (கூ0)

என்னநின்றேத்தினானையின்னகைநிறிதுதோன்ற
முன்னவனடியாரெண்ணமுடிப்பவனருட்கணோக்கா
லுன்னதுவேட்கையாதிஙகுரையெனவிரையத்தாழ்நது
சென்னிமேற்செஙகைகூப்பித்தேவர்கோனிதனைவேண்டும். (கூக)

(அகூ) அட்டாஙகம-தலை இருகை இருசெவி இருபுயம மோவாய்.
பஞ்சாங்கம்-தலை இருகை இருமுழந்தாள. உள்-உள்ளம்.

(அகூ) விடஙகர்-டஙகத்திலுற்செய்யப்படாதவர்; எனவே சுயம்பு. டங்
கம்-உளி.

**தாண்டகம்.**

ஐயநின்னிருக்கையெல்லைக்கணியனுமளவினீக்கா
வெய்யவெண்பழியினோடுமேலைநாளடியேன்செய்த
மையல்வல்வினையுமாய்ந்துன்மலரடிவழுத்திப்பூசை
செய்யவுமுரியனானேன்சிறந்தபேறிதன்மேல்யாதோ. (௧௨)

இன்னநின்பாதப்போதேயிவ்வாறேயென்றும்பூசித்
துன்னடியாருள்யானுமோரடித்தொண்டனாவே
னன்னதேயடியேன்வேண்டத்தக்கதென்றடியில்வீழ்ந்த
மன்னவன்றனக்குமுக்கண்வரதனுங்கருணைபூத்து. (௧௩)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இருதுவிற்சிறந்தவேனிலுமதியாறிரண்டினிற் சிறந்தவான்றக
ரும், பொருவிருராசையிற்சிறந்தசித்திரையுந்திதியினிற்சிறந்தபூரணை
யு, மருவுசித்திரையிற்சித்திரைதோறும்வந்துவந்தருச்சியோர்வருட
ந், தெரியுநாளுமுந்நூற்றறுபதுமைந்துஞ்செய்தவர்ச்சனைப்பயனெ
ய்தும். (௧௪)

துறக்கநாடணைந்துசுத்தபல்போகந்துய்த்துமேன்மலபரிபாகம்,
பிறக்கநான்முகன்மான்முதற்பெருந்தேவர்பெரும்பதத்தாசையும்பி
றவு, மறக்கநாம்வீடுவழங்குதுமென்னவாய்மலர்ந்தருளினான்கருணை,
சிறக்கநால்வேதச சிகையெழுமனுதி சிவபராஞ்சுடர்விடை கொடுத்
தான். (௧௫)

மூடினன்புளகப்போர்வையால்யாக்கைமுடிமிசையஞ்சலிக்கமலஞ்
சூடினன் வீழ்ந்தானெழுந்து கண்ணருவிதளும்பினன்பன்முறைது
தாடினனையனடிபிரிவாற்றாதஞ்சினனவனருளாணை [திசெய
நாடினன்பிரியாவிடைகொடுத்துறக்கநண்ணினன்விண்ணவர்நாதன்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வந்தரமங்கையர்கவரிமருங்குவீச மந்தாரகற்பகம்பூமாரிதூற்ற,
வந்தரநாட்டவர்முடிகளடிகளசூடவயிராணி மூலைத்தடந்தோய்ந்தக
லந்திண்டோள், விந்தமென்சசெம்மாந்துவிம்முகாமவெள்ளத்துளுட
லழுந்தவுள்ளஞ்சென்று, சுந்தரநாயகன்கருணைவெள்ளத்தாழ்ந்து
தொன்முறையின்முறைசெய்தான்றுறக்கநாடன். (௧௭)

இந்திரன்பழிதீர்த்தபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௪௪௦.

---

(௧௭) மந்தாரகற்பகம் உம்மைத்தொகை.

### இரண்டாவது

# வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

மட்டவிழுங்கொன்றைச்சடையான்மகவானைத்
தொட்டபழியின்றொடக்கறுத்தவாறீது
பட்டமதவேழம்பரனைப்பராய்முனிவ
னிட்டகொடுஞ்சாபநீத்தேகியவாறோதுவாம். (௧)

கருவாசனைகழிக்குங்காசிநகர்தன்னிற்
றுருவாசவேதமுனிதொல்லாகமத்தின்
பெருவாய்மையாற்றன்பெயர்விளங்கவீச
னொருவாவிலிங்கவொளியுருவங்கண்டான். (௨)

இன்புற்றருச்சனைசெய்தேத்துவானவ்வேலை
யன்புக்கெளியனருளாற்றிருமுடிமேன்
மின்பொற்கடிக்கமலப்போதொன்றுவீழ்த்திடலுந்
தன்பொற்கரகமலப்போதலர்த்தித்தாங்கினான். (௩)

தாங்கிக்கண்சென்னிதடமார்பணைத்துடலம்
வீங்கித்தலைசிறந்தமெய்யுவகைமேற்கொள்ள
நீங்கிக்கழிந்தகருணைநிதியனையான்
பூங்கற்பகநாட்டிற்போகினானவ்வேலை. (௪)

சங்கலறச்செங்களத்துத்தானவரைத்தேய்த்துவிறற்
கொங்கலர்தார்வேய்ந்தமரர்கோமான்றன்கோநகரிற்
செங்கணமரர்பெருஞ்சேனைகடல்கலிப்ப
மங்கலப்பல்லாண்டுமறைமுழங்கவந்தணைவான். (௫)

எத்திக்குங்கல்லென்றியங்கலிப்பவேந்திழையார்
தித்தித்தமுதொழுகுங்கீதஞ்செவிமடுப்பப்
பத்திக்கவரிநிரைதானைப்படுகடலிற்
றத்திப்புரளுந்திரைபோற்றலைபனிப்ப. (௬)

---

(உ) அத்திரிமுனிவர் சிவபெருமானைப் புத்திரராகி அவதரிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்தபொழுது, அவர் பத்தினியாகிய அநசூயையினது புஷ்பாஞ்சலிக் கரத்திலே, சிவாம்சமாக இம்முனிவர் குழந்தையாகி, "சர்ப்பவாசமும் சர்வவாசங்களினும் துர்வாசம்" என மொழிந்துகொண்டே தோன்றியமையால் துர்வாசரெனப் பெயர் பெற்றனர். இச்சரித்திர விரிவைச் சனற்குமாரசங்கிதையுட் காண்க. (ச) கழிதல் - மிகுதல்.

கலிவிருத்தம்.

அங்கட்கடலினெடுங்கூம்பநிமிர்ந்த
வங்கத்தலையுய்க்குமீகான்றனைமானத்
திங்கட்குடைநிழற்றத்தீந்தேமதங்கவிழ்க்கும்
வெங்கட்களிற்றின்மிசைப்பவனிபோந்தணைந்தான். (௭)

லுத்தமனையர்ச்சித்துப்போந்தமுனியுத்தமனும். (௮)

தீங்கரியவாசிமொழிசெப்பித்தன்செங்கரத்தி
னீங்கரியதாமரையைநீட்டினான்மற்றதனைத்
தாங்கரியசெல்வத்தருக்காலோர்கையோச்சி
வாங்கிமதயானையின்மேல்வைத்தான்மதியில்லான். (௯)

கீறிக்கிடந்தமதியனையகிம்புரிக்கோட்
டேறிக்கடங்கவிழ்க்குமால்யானையுச்சியின்மே
ஞறிக்கிடந்தநறுமலரைவீழ்த்தியுரற்
சீறிக்கிடந்தநெடுந்தாளாற்சிதைத்தன்றே. (௧௦)

கண்டான்முனிகாமற்காய்ந்தானுதற்கண்போல்
விண்டாரழல்சிதறநோக்கினான்வெங்கோபங்
கொண்டானமரரோர்துங்கக்கொதித்தால
முண்டானெனநின்றுருத்தானுரைக்கின்றான். (௧௧)

புள்ளியதோலாடைபுனைந்தரவப்பூணணிந்த
வெள்ளியசெங்கண்விடையானடிக்கமல
முள்ளியமெய்யன்புடையாரருவருத்துத்
தள்ளியசெல்வத்தருக்கினையென்செய்தாய். (௧௨)

கதித்தார்முடியமரர்கையுறையேநன்கு
மதித்தாயெம்மீசன்மதிமுடிமேற்சாத்தும்
பொதித்தாதவிழ்மலரைப்போற்றாதுவாங்கி
மிதித்தானைசிந்தவதன்மேல்வைத்தாய்பேதாய். (௧௩)

வண்டுளருந்தண்டுழாய்மாயோனிறுமாப்பும்
புண்டரீகப்போதுறையும்புத்தேளிறுமாப்பு
மண்டர்தொழவாழுன்னிறுமாப்புமாலால
முண்டவனைப்பூசித்தபேறென்றுணர்கிலையால். (௧௪)

(௮) கையுறை-கையுறுவது; அது காணிக்கை. (௧௩) பொதித்தல்-நிறைத்தல்.

சேட்டானைவானவரின்சென்னிசெழியரிலோர்
வாட்டானைவீரன்வளையாற்சிதறுகின்
கோட்டானநாற்கோட்டுவெண்ணிறத்தகுஞ்சரமுங்
காட்டானையாகவெனவிட்டான்கடுஞ்சாபம். (கரு)

சபித்தமுனிபாதந்தலைக்கொண்டுசெங்கை
குவித்தமரர்தங்கோன்குறையிரப்பாரைய
வவித்தபொறியாயெம்மரசுங்காறள்ளுஞ்
செவித்தறுகண்வேழமுந்தீங்குடையரன்றே. (கசு)

அத்தகையநீராற்சபித்தீரடிகேண்மற்
றித்தகையசாபமினிவிடுமினென்றிரந்து
கைத்தலங்கள்கூப்பிக்கரைந்தார்க்கிரங்கியருள்
வைத்தமுனிபிறிதுசாபமவருக்கின்றான். (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிந்தனைவாக்கிற்செட்டாசசிவனருளளித்தசேட
னந்தனைபரிகாரத்தானீங்காதலைமட்டாக
வந்ததுமுடிமட்டாகமத்தமாவனமாவாகி
யைந்திருபஃதாண்டெல்லையகன்றபின்பண்டைத்தாக. (கஅ)

என்றனன்பிறிதுசாபமிந்திரன்மகுடபங்க
மொன்றியசெய்கைபினனருரைத்துமற்றஃதுநிற்க
நின்றவெள்ளானைவானநீத்தறிவிழந்துநீலக
குன்றெனவனத்துவேழககுழாத்தொடுகுழீஇயதன்றே. (ககூ)

மாவொடுமயங்கிசசெங்கண்மறம்பயில்காடுமுல்லைப்
பூவொடுவழங்குநீததபுறவமுங்குறவர்தங்க
டேவொடுபயிலுங்கல்லுந்திரிந்துநூறாண்டுஞ்செல்லக்
காவொடுபயிலுந்தெய்வக்கடம்பமாவனம்புக்கன்றே. (உ0)

புககுரல்வட்டத்திணைதாற்பொருவிறேவியலிற்றீர்ந்த
மைக்கருங்களிறுமுககண்மாதவனருள்வந்தெய்தத்
தக்கதோரமையஞ்சாரமரகதந்தழைத்துமின்னு
நக்கபொனமுளரிபூத்தநளிர்கயந்தலைக்கண்டன்றே. (உக

---

(கரு) கோள-வலி; தானம்-மதம். (கசு) அரசும்வேழமும தீங்குடையர்எனத் திணைவிரவிச சிறப்பினு லுயர்திணைமுடிபேற்றன.

(உ0) மறம்-கொலை; இது பண்பாகுபெயராய் மறவரையுணர்த்திற்று. காடு-ஈண்டுப் பாலைநிலம்.

காண்டம்

கண்டபோதறிவுதோன்றசகயந்தலைக்குடைந்தபோது
பண்டையவடிவந்தோன்றப்பாஞ்சுடாருட்கணடோன்றக்
கொண்டதோர்பரமானந்தக்குறியெதிர்தோன்றகுமபிட்
டண்டர்நாயகனைப்பூசைசெய்வதற்கனபுதோன்ற (உஉ)

தூம்புடைக்கையான்மொணமெஞ்சனத்தூநீராட்டித்
தேம்புடையொழுகப்பள்ளித்தாமமுநதெரிந்துசாத்திப்
பாம்புடைத்தாயவேணிப்பரனையர்சசிககவுளளத
தாம்புடையறிந்தவெநதையானையைநோககிசகூறும. (உங)

வநதனைதயெவனீவேண்டுமெழுரமெயனுரைத்தியென்னச
சிந்தையிலனபுகூர்நதெதயவதவேழுநதாழ்நது
முநதையில்விளைவும்வநதமுறைமையுமுறையாறகூறி
யெநதையையடையப்பெறறேற்கினியொருகுறையுணடாமோ (உச)

என்பதாமாரம்பூணடவெநதையிககரிகளடமோ
டொன்பதாயடியனேனுமுனனடிபிரியாதுனறன
முனபதாயிவ்விமானமுதுகுறசுமபபவெனநேரு
ரன்பதாயொனறெனனுள்ளததழ்ந்தலால்ஃதேவேண்டும். (உரு)

இடையறுவன்பினவேழுரிதனை நககூறவிண்ணு
யிடையவனம்பானமெய்யனபுடையவனவனைத்தாங்கி
யடைவதேநமககுவேணடுமெகமகிழ்வென்றேப்பின்னும்
யிடையவன்வரநகணல்கிவிடைகொடுத்தருளினனே. (உசு)

எழுசீர்ககழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விடைகொடுவணங்கியேகும்வெள்ளானைமேற்றிசையடைந்து தன்பெயராற், றடமுமற்றதன்பாலரனையுங கணேசனறன்னையுங கண்டருச்சனைசெய், திடையறுவன்புநதானு மங்கிருக்குமெல்லையிச் செய்திகேட்டருள்கூர், கடவுளர்பெருமானுமையுரைவிளித்தெங்க ளிற்றினைக்கொணர்கெனவிடுத்தான. (உஎ)

வல்லைவந்தழைத்தார் தம்மைமுன்போக்கி வருவலென்றெழுந் தூகீழ்த்திசையோ, ரெல்லைவந்தோரூர்தனதுபோரற்கண்டிநதிரேச சுரனெனவிறைவன், றொல்லைவண் பெயராலொன்றுகண்டானைத் தூயபூசனைசெய்தங்கிருப்பக், கல்லைவன் சிறகுதடிந்தவனின்னுங்க ளிறுவந்திலதெனப்பின்னும். (உஅ)•

(உச) வந்தனை என்பதில் ஐ சாரியை. இங்ஙனம வருமிடந்தோறும் கொள்க.

மதுரை

மனத்தினுங்கடியதூதரைவிடுப்பவூனடைந்திறைவனைவணங்கிப்
புனத்தினுங்கடியகல்லினும்பன்னாட்புன்கணேயுறவருசாபங்
கனத்தினுங்கரியகண்டனைக்கண்டுகளைந்ததுங்கிளந்துதிக்கயத்தி
னினத்தினுங்கழிநதெய்வதவேழமினிதுவீற்றிருந்ததுமாதோ.

குடவயினைராவதப்பெருநதீர்த்தங்குடைந்தயிராவதகணேசக்,
த,
தொடர்பினும்பாவத் தொடர்பினுஙகழிவர் சுராதிபன்களிறுசெ
னெறிபோ, யிடாகெடவைகைபடிநதுதென்கரையிலிந்திரேசுர
டிபணிவோர். (௩௦

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இம்மையிலறமூன்றூன்றுலெய்தியபயனையெய்தி
யம்மையின்மகவானீரேழரும்பதமளவும்வானில்
வெம்மையில்போகமூழ்கிவெறுபபுவநதடையவுள்ளச
செம்மையில்விளைபேரின்பசிவகதிசெல்வராவார். (௩௧

வெள்ளையானைசசாபநதீர்த்தபடலம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம்-சஎக.

---

மூன்றாவது

## திருநகரங்கண்டபடலம்.

கலிநிலைத்துறை.

தானவாறிழிபுகர்முகத்தடகரிசாபம்
போனவாறுரைசெயதுமேற்புதுமதிமுடிமேல்
வானவாறினனடம்பமாவனமுதுநகர
மானவாறதுதனைசசிறிதறிந்தவாறிசைப்பாம். (௧)

இன்னரம்புளரேழிசையெழான்மிடற்றளிகள்
கின்னரம்பயில்கடம்பமாவனத்தினின்கீழ்சார்த்
தென்னர்சேகரனெனுஙகுலசேகரனுலக
மீன்னர்சேகரனரசுசெய்திருப்பதுமணவூர். (௨)

குலவுமப்பெரும்பதியிலங்கோக்களிலொருவ
னிலவுமாகிதிபோலருச்சனைமுதனியதி
புலவுமாஞ்சிவதருமமுந்தேவொன்பரன்பாற்
றலைமைசான்றமெய்யன்பினன்றனஞ்சயனென்பான். (௩)

காண்டம்.

செல்வமாநகரிருந் துமேற்றிசைப்புலஞ்சென்று
மல்லல்வாணிகஞ்செய்து தன்வளம்பதிமீள்வான்
றொல்லையேழ்பவக்கடற்கரைதோன்றுவித்தடியா
ரல்லதீர்ப்பவன்கடம்பமாவனம்புகுமளவில். (௪)

இரவிகண்மறைந்தேழ்பரியிரதமுந்தானு
மூரவுநீர்க்கருங்கடலில்வீழ்ந்தொளித்தனனாக
விரவுநீண்மயக்கிருள்வயிற்றமியனாய்மெலியு
மரவுநீர்ச்சடையண்ணலுக்கன்பினனாகண். (௫)

வாங்குநான்மருப்பேநதியமதமலையெருத்தந்
தாங்கியாயிரநகரங்களாற்றடவிமெண்டிசையுந்
தூங்குகாரிருடுரந்துசெஞ்சுடரெனசசூழ்போய்
வீங்குகாரிருளொதுக்கியவிமானநேர்கண்டான். (௬)

அடுத்தணைந்தனனவிர்சுடர்விமானமீதமர்ந்த
கடுத்ததும்பியகண்டனைக்கண்டுதாழ்ந்துவகை
மடுத்தநெஞ்சினனாயனம்வைகிருள்கழிப்பா
னெடுத்தசிந்தையினிருந்தனனிருக்குமவ்விருள்வாய். (௭)

சோமவாரமன்றுதலாற்சுரர்களங்கெய்தி
வாமமேகலைமலைமகடலைமகன் மலர்ந்த
காமர்சேவடிபணிந்தவன்கநகுல்போற்கருதி
யாமநான்கினுமருச்சனையின்புறப்புரிவார். (௮)

அண்டர்வந்ததுமருச்சனைபுரிவதுமனைத்துந்
தொண்டரான்பினுக்கெளியவன்சுரர்தொழக்கரத்த
கண்டனின்னருட்கண்ணினாற்கண்டனனுதலிற்
புண்டரம்பயிலன்புடைப்புண்ணியவணிகன். (௯)

நானமென்பனிநறும்புனனயகன்பூசைக்
கானநல்விரைவருக்கமுமமரர்கைகொடுத்து
ஞானவெண்மதிச்சடையவன்கோயிலின்ஞாங்கர்த்
தானமர்ந்தருச்சனைசெய்வான்றங்கணாயகனை. (௧௦)

வன்னதன்னைமெய்யன்பினாலருச்சிசெய்வானே
ருன்னவல்வினையீட்டமுமகன்குலுமொதுங்கக்
கன்னமில்லவன்யாரையுங்கண்டிலன்கண்டான்
றன்னருஞ்சுடர்விமானமேற்றனித்துறைதனிமை. (௧௧)

(௧௧) அருச்சி - முதனிலைத்தொழிற்பெயர்.

ஆழ்ந்தசிந்தையனதிசயமடைந்துசேவடிக்கீழ்த்
தாழ்ந்தெழுந்திருகைகளுந்தலைமிசைக்கூப்பிச
சூழ்ந்துதன்பதிக்கேகுவானொருதலைதுணிந்து
வாழ்ந்தவன்பினன்விடைகொடுவழிக்கொடுவந்தான். (கஉ)

முக்கடம்படுகளிற்றினன்முகிறவழ்கோயில்
புக்கடங்கலர்சிங்கமன்னனைதாபுகல்வான்
றிக்கடங்கலுங்கடந்தவெந்திகிரியாய்நெருந
லக்கடம்பமாவனத்திலோரதிசயங்கண்டேன். (கங)

வல்லைவாணிகஞ்செயநான்வருவழிமேலைக்
கல்லடைந்ததுவெங்கதிரங்குலாம்பிறப்பு
மெல்லைகாணியகண்டனனிரவிமண்டலம்போ
ல்லலஞ்சுடர்விமானமுமதிற்சிவக்குறியும் கச)

மாவலம்புதார்மணிமுடிக்கடவுளர்வந்தத்
தேவதேவனையிரவெலாமருச்சனைசெய்து
போவதாயினாயானுமப்பொழுதணைந்தங்கோயின
மேவுமீசனைவிடைகொடுமீண்டனனென்றான் (கரு)

மூளுமன்பினன்மொழிந்திடமுக்கணெம்பெருமான்
றாளுமஞ்சலிகரங்களுந்தலையிலவைத்துள்ள
நீளுமன்புமற்புதமுமோர்மபநீராஞால
மாளுமன்னவனிருந்தனனபோயினனருக்கன். (கசு)

ஈடுவாரவினையாததபோதிருணமலங்கருக
வாட்டுவாரவர்சென்னிமேன்மலரடிக்கமலஞ்
சூட்டுவார்மறைகடந்ததந்தொல்லுருவிளங்கக
காட்டுவாரொருசித்தராயத்தோன்றினாகனவில். (கஎ)

வடிகொள்வேலினாய்கடம்பமாவனத்தினைத்திருந்தக்
கடிகொள்காடகழ்ந்தணிநகர்காண்டெனவுணர்த்தி
யடிகளேகினார்கவுரியராண்டகைகங்குல்
விடியும்வேலைகணவிழித்தனன்பரிதியும்விழித்தான். (கஅ)

கனவிற்றீர்ந்தவனியதியின்கடன்முடித்தமைச்சர்
சினவிற்றீர்ந்தமாதவர்க்குந்தன்கனாத்திறஞ்செப்பி
நனவிற்கேட்டதுங்கனவினிற்கண்டதுநயப்ப
வினவித்தேர்ந்துகொண்டெழுந்தனன்மேற்றிசைச்செல்வான்.

---

(கச) எல்லை - முடிவு.

காண்டம்.

அமைச்சரோடெம்பீமாவனமபுகுந்தம்பொன்
சமைத்தவிழ்ந்தபொற்றாமரைத்தடம்படிந்தொளிவிட்
டிமைத்தலர்ந்தபொன்விமானமீதினிதுவீற்றிருந்தோர்
தமைச்சரண்பணிந்தஞ்சலிதலையின்மேன்முகிழ்த்தான். (உ0)

அன்புபின்றள்ளமுன்புவந்தருட்கணீர்த்தேக
வென்புநெக்கிடவேகிவீழ்ந்திணையடிக்கமலம்
பொன்புனைந்ததார்மௌலியிற்புனைந்தெழுந்திறைவன்
முன்புநின்றுசொற்பதங்களாற்றோத்திரமொழியான். (உக)

சரணமங்கையோர்பாகத்துறைசங்கரசரணஞ்
சரணமங்கலமாகியதனிமுதல்சரணஞ்
சரணமந்திரவடிவமாஞ்சதாசிவசரணஞ்
சரணமும்பாகணுயகபசுபதிசரணம் (உஉ)

ஆழிஞாலமேலாசையுமமரர்வானபதமேல்
வீழுமாசையுமெவறுத்தவர்க்கன்றிமண்ணுண்டு
பீழைமூழ்கிவானரகொடுபிணிபடசசுழலு
மேழையேங்களுக்காவதோவெந்தைநின்கருணை. (உரு)

சூளதாமறைசென்னியுந்தொடதொடாநீண்ட
நீளனீயுனக்கனபிலமாயினு நீயே
மூளவனபுதந்தெங்குடிமுழுவதும்பணிகொண
டாளவேகொலிக்கானகத்தமர்ந்தனையன்றே. (உசு)

சுரந்தவன்பிருகண்வழிசசொரிவபோற்சொரிந்து
பரந்தவாறெருசிவானந்தப்பரவையுட்படிந்து
வரந்தவாதமெயயன்பினுல்வலங்கொடுபுறம்போந
தரந்தைதீர்ந்தவனொருசிறையமைசசரோடிருந்தான். (உ௭)

ஆயவேலையின்மன்னவனுணையாலமைசசர்
மேயவேவலர்துறைதுறைமேவினாவிடுப்பப்
பாயவேலையினுர்த்தனர்வழிகவொடுபடர்ந்தார்
சேயகாடெறிந்தணிநகர்செய்தொழினமாக்கள். (உஅ)

வட்டவாய்மதிப்புினவின்வெளவாயக்குயங்விய
மிட்டதோளினர்யாப்புடைக்கசசினரிரும்பின்
விட்டகாரொளிமெய்யினர்விசிகொள்வார்வன்றோற்
றொட்டகாலினர்வனமெறிதொழிலினராணுர். (உள)

(உக) அருட்கணீர்தேங்க என்றும பாடம். சொற்பதம-புகழ்மொழி.
(உஉ) மங்கலம் என்பது சிவம.

மறியுமோதைவண்டரற்றிடமார்ந்தலைபனிப்ப
வெறியுமோதையுமெறிபவரோதையுமிரங்கி
முறியுமோதையுமுறிந்துவீழோதையுமுகில்வாய்ச்
செறியுமோதையுங்கீழ்ப்படமேற்படச்செறியும். (௨௮)

ஒளிறுதாதொடுபோதுசெந்தேனுகவொலித்து
வெளிறில்வன்மரஞ்சினையிறவீழ்வசெங்களத்துப்
பிளிறுவாயவாய்ந்தகொடுகுருதிநீர்பெருக்கக்
களிறுகோடிறமாய்ந்துவீழ்காட்சியவனைய. (௨௯)

பூவடைந்தவண்டினமயற்புறவொடும்பழனக்
காவடைந்தனபறவைவான்கற்பகமடைந்த
கோவடைந்திடவொதுங்குறுங்குறும்புபோற்செறிந்து
மாவடைந்தனமாடுளவரைகளுங்காடும். (௩௦)

இருணிரம்பியவனமெலாமெறிந்துமெய்யுணர்ந்தோர்
தெருணிறைந்தசிந்தையின்வெளிசெய்துபல்லுயிர்க்கு
மருணிறைந்துபற்றறுத்தவனடிநிழலடைந்த
கருணையன்பாதம்பிறப்பெனவேரொடுங்களைந்தார். (௩௧)

களைந்துநீணிலந்திருத்திசெந்நெறிபடக்கண்டு
வளைந்துநன்னகரெடுப்பதெவ்வாறெனத்தேறல்
விளைந்ததாதுகுதார்முடிவேந்தன்மந்திரரோ
டளைந்தளாவியசிந்தையோடிருந்தனனங்கண். (௩௨)

மெய்யரன்புதோய்சேவடிவியனிலந்தீண்டப்
பொய்யகன்றவெண்ணீறணிமேனியர்பூதிப்
பையராநள்ளிருட்கனவில்வந்தருளியபடியே
யையர்வல்லைவந்தருளினாரரசுளங்களிப்ப. (௩௩)

கனவிலும்பெருங்கடவுளார்காண்பதற்கரியார்
நனவிலும்வெளிவந்தவாதமையெதிர்நண்ணி
நினைவினின்றதாளிறைஞ்சிநேர்நின்றுநல்வரவு
வினவியாதனங்கொடுத்தனன்மெய்யுணர்வேந்தன். (௩௪)

தென்னரன்பினிலகப்படுசித்தர்தாமுன்னிச்
சொன்னவாதிநூல்வழிவருசார்புநூற்றொடர்பா
னன்னராலயமண்டபங்கோபுரங்கர
மின்னவாறுசெய்யெனவகுத்திம்மெனமறைந்தார். (௩௫)

---

(௩௫) ஆதிநூல்-ஆகமம், வழிநூல்-சிற்பம்; சார்புநூல்-ஏனையவை.

மடையுடைக்குந, தோட்டிளநதண்ணுநதுழாயணிமௌலித்தோன்ற லும்வடவயிற்றோடு, நீட்டிரும்போந்தினிமிர்குழலெண்டோணிலியு நகாவலாநிறுவி. (சங)

கைவரையெருததிற்கனவரைகிடநதகாட்சியிற்பொலிநதொளி ர்கோயின், மைவரைமிடற்றுமதுரைநாயகரைமரபுளியருசசனைபுரி வான், பொயவரைமறையாகமநெறியொழுகும்புண்ணியமுனிவரை யாதி, சைவரைசசாசிபபதியினிறகொணாந்துதலததினிற்றுபனகு செயதான். (சச)

உத்தமகுலத்துநாற்பெருஙகுடியுமுயாநதவுமிழிநதவுமயஙக, வை ததவுமானபுறககுடிமூனறுமறைவழுககாமநவகுதத, ததநமநெறியி னறொழுகவைதிகமுஞசைவமுநதருமமுநதழைப்பப், பைதநெழுதி ன்ரநீர்ஞாலமேறறிலகமபதிதநெனநகாவளமபடுத்தான். (சரு)

அனறுதொடடரசனநகரெயதிடணிசெழுமஙகலமியமப, வெ ன்றுதொட்டிமைககுமனேயினமஙகலநா ளெயதினுனிருநதுமுப்புர முங, குனறுதொட்டெயதானகோயினமூனறுறுபபுஙகுறைவில்பூச னைவழாமதொஙகக, கனறுதொடடெறிநதுகனியுகுததானபோறகலி துரநதரசுசெயநாளில (சசு)

பவநெறிகடககுமபுார்தநிவனகிரணம்பரப்பிளம்பரிதிபோன்ம லயத், துவசனைப்பயநதுமைநதன்மேனஞாலஞசுமத்திநாள்பலகழித் தொருநா, ணவவடிவிறநதோனுலயதநெயதிநாதனைப்பணிநதுமூவ லஞ்செய, துவமையிலின்பவருணிழலெயதியொன்றியொன்றாகிலே நின்றான். (சஎ)

திருநகரஙகண்டபடலம முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருகஅ.

---

(சரு) புறக்குடிமூன்று-அநுலோமா பிரதிலோமா சஙகரசாதியர்.

(சசு) மூன்றுறுப்பு-நித்தியம் நைமித்திகம் காமியம்.

(சஎ) நவவடிவமாவன - பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சுதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம் என்பன; இவற்றுள் முன்னையநான் கும் உருவம், பின்னையநான்கும அருவம், இடையது அருவுருவம்.

நான்காவது

# தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம்.

கலிவிருத்தம்.

கன்னியொருபங்கினர்கடம்பவனமெல்லா
நன்னகரமானதுநவின்றுமுலகீன்ற
வன்னைமகளாகிமலயத்துவசனுக்குந்
தென்னனிடைவந்துமுறைசெய்ததுரைசெய்வாம். (க)

மனுவறமுவந்துதன்வழிச்செலநடத்தும்
புனிதனமலயத்துவசன்வென்றிபுனைபூணன்
கனியமுதமன்னகருணைக்குறையுள்காட்சிக்
கினியன்வடசொற்கடறமிழ்க்கடலிகந்தோன். (உ)

வேனில்விறல்வேள்வடிவன்வேட்கைவிளைபூமி
யானமடவார்கள்பதினாயிரவருள்ளான்
வானொழுகுபானுவழிவந்தொழுகுசூர
சேனன்மகள்காஞ்சனையைமணநல்வினைசெய்தான். (ங)

கண்ணுதலைமுப்பொழுதும்வந்துபணிகற்றோ
னெண்ணில்பலநாண்மகவிலாவறுமையெய்திப்
பண்ணரியதானதருமம்பலவுமாற்றிப்
புண்ணியசிரம்புபரிவேள்விபுரிகுற்றான். (ச)

ஈறின்மறைகூறுமுறையெண்ணியொருதொண்ணூற்
றாறினொடுமூன்றுமகமாற்றவமரேச
னூறுமகமும்புரியினெனபதகொடிப்பின்
மாறுமெனமற்றதனைமாற்றியிதுசாற்றும். (ரு)

நன்பொருள்விரும்பினையதற்கிசையஞால
மின்புறுமகப்பெறுமகத்தினையியற்றி
னன்புறுமகப்பெறுதியென்றமரர்நாடன்
றன்புலமடைந்திடலுமிம்பநகுதாரான். (சா)

---

(க) இவ்வரசர் அகத்தியமுனிவர் முன்னிலையில் "யான் தருமமே நடத்தக்கடவேன்" என்று உறுதிகூறி அது பிறழாமைக்கு அறிகுறியாக அம்முனிவர் வாசஸ்தானமாகிய மலயமலையைத் துவசத்தில் வரைந்து கைக்கொண்டமையால் மலயத்துவசனெனப் பெயர்பெற்றனரென்பர.

(சா) பொருள் - புதல்வன்.

மிக்கமகவேள்விசெயவிருப்புடையனாகி
யக்கணமதற்குரியயாவையுமமைத்துத்
தக்கரியமத்துரியதேவியொடுசாலை
புக்கனனிருந்துமகவேள்விபுரிகிற்பான். (எ)

ஆசறுமறைப்புலவராசிரியர்காட்டு
மாசறுசடங்கினவழிமந்திரமுதாத்த
வோசையநுதாத்தசொரிதந்தழுவவோதி
வாசவனிருக்கையிலிருந்தெரிவளர்ப்பான். (அ)

விசும்புநிலனுந்திசையுமேவளவியச்சாலைப்
பசும்புகைபடர்ந்தொருபடாமெனமறைப்பத்
தசும்புபடுநெய்பொரிசமித்தினொடுவானோர்க்
கசும்புபடுமின்னமுதினைக்குதிமடுத்தான். (கூ)

ஐம்முகனநாதிபரமாத்தனுரையாற்று
னையம்முகநிறைத்தழனிமிர்ந்துவருமெல்லை
பைம்முகவராவணிபரஞ்சுடர்தனிப்ப
மைம்முகநெடுங்கணிமையானமனைவிநாண. (க0)

வள்ளன்மலயத்துவசமீனவன்வலத்தோ
டொளமனைகாஞ்சனைசுருங்கியமருங்கு
றள்ளவெழுகொங்கைகடதும்பநிமிர்தீம்பால்
வெள்ளமொழுகக்கரியவேற்கணிடனாட. (கக)

இவ்வுலகமன்றியுலகேழுமகிழ்வெய்தச்
சைவமுதலாயினதவத்துறைநிவப்ப
வெவ்வியமறங்கெடவறங்குதுகலிப்பத்
தெய்வமறைதுந்துபிதிசைபுலனிசைப்ப. (கஉ)

மைம்மலர்நெடுங்கணரமங்கையர்நடிப்ப
மெய்ம்மனமொழிச்செயலனவேறுபடலின்றி
யம்மதுரைமாநகருளாரகமகிழ்ச்சி
தம்மையறியாதனதலைத்தலைசிறப்ப. (கங)

மாந்தர்பயின்மூவறுசொன்மாநிலவரைப்பிற்
றீந்தமிழ்வழங்குதிருநாடதுசிறப்ப
வாய்ந்ததமிழ்நாடரசளித்துமுறைசெய்யும்
வேந்தர்களின்மீனவர்விழுத்தகைமையெய்த. (கச)

---

(அ) உதாத்தம், அநுதாத்தம், சொரிதம் - எடுத்தல், படுத்தல், நலிதல்.

